# ஸ்ரீ ராமாநுஜன் 171.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ஸு மார்ச் & ஏப்ரல்மீ<br>சுபக்ருத்ஸு பங்குனிமீ | ஸஞ்சிகை 3 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—60.

உலகுய்ய மால்நின்ற உயர்வேங்கடத்தே*
அலர்மகளை முன்னிட்டு அவன்தன்—மலரடியே*
வன்சரணாய்ச் சேர்ந்த மகிழ்மாறன் தாளிணையே*
உன்சரணாய் நெஞ்சமே உள்.

| | |
|---|---|
| மால் | —ஸர்வேச்வரன் |
| உலகு உய்ய நின்ற | ஸகல லோகங்களும் உஜ்ஜீவிக்கும்படியாக நின்ற |
| உயர் வேங்கடத்தே | உயர்ந்த திருமலையிலே |
| அலர் மகளை முன்னிட்டு | பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு |
| அவன் தன் மலர் அடியே | அப்பெருமானுடைய திருவடித் தாமரைகளையே |
| வன் சரண் ஆய் சேர்ந்த | திண்ணிய உபாயமாகப் பற்றின |
| மகிழ் மாறன் | —வகுளாபரணரான நம்மாழ்வாருடைய |
| தாள் இணையே | —உபய பாதங்களையே, |
| நெஞ்சமே | —ஓ மனமே! |
| உன் சரண் ஆய் உள். | உனக்குப் புகலாக ப்ரதிபத்தி பண்ணு. |

* "கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்" என்கிறபடியே இன்னாரினையாரென்கிற வாசியின்றிக்கே ஸகலப் பிராணிகளும் உஜ்ஜீவிக்கும்படியாகத் திருமலையிலே யெழுந்தருளி யிருக்கின்ற திருவேங்கட முடையானுடைய திருவடிகளைப் பிராட்டி புருஷகாரமாகப் பற்றின படியை *உலகமுண்ட திருவாய்மொழியி லருளிச் செய்த நம்மாழ்வாருடைய திருவடிகளே நமக்குத் தஞ்சமென்றாராயிற்று.

கீழ் *நீராய் நிலனாய்ப் பதிகத்தில் மிக்க ஆர்த்தியோடே பரமபதத்தளவும் கேட்கும்படி கூப்பிட்டார். அங்ஙனே கூப்பிடச் செய்தேயும் எம்பெருமான் வந்து முகங்காட்டாமையாலே மிகவும் தளர்ந்து நோவுபட்ட ஆழ்வார், அப்பெருமான் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து நிலவுலகத்தே வந்து ராமக்ருஷ்ணாத் யவதாரங்கள் பண்ணி அக்காலத்திலே யிழந்தார்க்கும் இழக்கவேண்டாமல் திருவேங்கடமலையிலே நித்யஸூரிகளோடு நித்ய ஸம்ஸாரிகளோடு திர்யக்குக்களோடு வாசியற எல்லாரும் வந்து ஒருமிடறாக ஆச்ரயிக்கலாம்படி நித்யஸந்நிதி பண்ணியிருக்கிறபடியை யநுஸந்தித்து அத்திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பஞ் செய்து சரணம் புகுகிறார்—*உலக முண்டவென்னுயித்திருவாய்மொழியில்.

சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்குப் பல நியமங்கள் ஏற்பட்டிருக்கின்றன. புண்ணிய க்ஷேத்ரத்தில் செய்யவேணும், வேறிடத்தில்

செய்யலாகாது என்கிற தேசநியமமும், வஸந்தாதி காலங்களிலே செய்யவேணும், மற்ற காலங்களிலாகாது என்கிற காலநியமமும், ஸ்நாநம் பாதப்ரக்ஷாளநம் முதலியவற்றைச் செய்தபின் செய்யவேணும், வேறுபடியாகச் செய்யக்கூடாதென்கிற ப்ரகார நியமமும், த்ரைவர்ணிகரா யிருக்கவேணும், அத்ரைவர்ணிகர் கூடாதென்கிற அதிகாரி நியமமும், இன்ன பலனைத்தான் இது தரும், மற்ற பலனைத் தாராதென்கிற ஃபல நியமமுமாகிற இந்த நியமங்க ளெல்லாம் ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்கு உள்ளனவேயன்றி சரணாகதிக்கு இந்த நியமங்க ளொன்றுமில்லை; இன்ன விஷயத்திலே செய்யவேணுமென்கிற விஷய நியம மொன்று மாத்திரமே இதற்குள்ளது. அதாவது—பரத்வம் முதலிய ஐந்திலுள்ளும் ஸௌலப் யாதி குணங்கள் பூர்ணமாயிருக்கப் பெற்ற இடமே விஷயமாகை. ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனை எம்பெருமான் தானே சொல்லப் புகுந்தாலும் சொல்லித் தலைக்கட்ட முடியாதபடி குணங்கள் பூர்த்தியாயிருப்பது அர்ச்சாவதாரத்திலே யாகையாலே ஆழ்வார் சரணாகதியை இப்போது அர்ச்சாவதாரத்தில் தலையான திருமலையிலே செய்தருளுகிறார். ஒன்பது பாட்டாலும் சரண்யன்படி சொல்லி, பத்தாம் பாட்டிலே சரணம் புகுகிறார்.

திருவாய்மொழி யாயிரத்தில் நூறு பதிகங்களன்றோ வுள்ளன. அவற்றுள் ஒரு பதிகத்திற்கும் அமையாத அதிசயமொன்று இப்பதிகத்திற்கு அமைந்துள்ளது. அஃதாவது என்னெனின்; ஒவ்வொரு பாட்டிலும் விடாமல் திருவடியைப் பற்றின சொல் அமைந் திருப்பது நோக்கத்தக்கது. முதற் பாட்டில் *குலதொ லடியே னுனபாதம் கூடுமாறு கூறுயே. 2. * ஆறுவன்பி னடியேன் உன்னடி சேர் வண்ண மருளாயே. 3, * அண்ணலே! உன்னடி சேர அடியேற்கு ஆவாவென்னாயே. 4. * பூவார் கழல்க ளருவினையேன் பொருந்து மாறு புணராயே. 5. * திணரார் சார்ங்கத் துனபாதம் சேர்வ தடியே னெந்நாளே. 6. * மெய்ந்நா னெய்தி யெந்நா ளுன்னடிக்க ளடியேன் மேவுவதே. 7 * நொடியார் பொழுது முனபாதங் காண நோலாதாற்றேனே. 8. * நோலா தாற்றே னுனபாதங் காண. 9. * அந்தோ! அடியே னுனபாதம் அகலகில்லே னிறையுமே. 10. * புகலொன்றில்லா வடியே னுன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே. 11. * அடிக்கீ ழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின். ஆக இப்பதிகம் முழுவதும் திருவடி ஸம்பந்தம் இடையறாத வரப்பெற்ற தென்னு மதிசயம் குறிக்கொள்ளத்தக்கது.

இதற்கொரு முக்கியமான ஹேதுவுமுண்டு. அதாவது, "முமுக்ஷுவுக் கறியவேண்டும ரஹஸ்யம் மூன்று" என்னப்பட்ட திருமந்த்ரம் த்வயம் சரம ச்லோகமாகிற மூன்று ரஹஸ் யங்களில், திருமந்த்ரத்திலும் சரம ச்லோகத்திலும் திருவடியைப் பற்றின ப்ரஸ்தாவமே கிடையாது; அஃதுள்ளது சரணௌ என்கிற த்வயத்தில் மட்டுமேயாம். அந்த த்வயத்தின் அர்த்தாநுஸந்தான பரமான * இவ்வுலகமுண்ட பதிகத்தில் திருவடியின் ப்ராதாந்யத்தை ஆழ்வார் இங்ஙனே காட்டியருளினது சாலச் சிறக்கும். அன்றியும், மற்ற இரண்டு ரஹஸ்யங் களிலும் பிராட்டியின் ஸம்பந்தமும் ஸ்பஷ்டமாகத் தோற்றிற்றில்லை. அக்குறையும் தீர த்வயத்தில் இரண்டு கண்டங்களி லுடையவும் தொடக்கத்தில் ஸ்ரீசப்த விந்யாஸமுள்ளது. அதற்குச் சேர * அகலகில்லே னிறையுமென் றலர்மேல் மங்கை யுறை மார்பா* என்றருளிச் செய்தா ராழ்வார். அதற்கிணங்க இந்நூற்றந்தாதிப் பாசுரத்திலும் "அலர்மகளை முன்னிட்டு" என்றருளிச் செய்யலாயிற்று. ... ... (60)

## நல்வார்த்தை நானூறு—முன்தொடர்ச்சி.

20. வடமொழியில் வழங்கும் காலக்ஷேப மென்கிற சொல்லுக்குத் தமிழில் போதுபோக்கென்பது பொருள். ஸ்ரீபாஷ்யம் ஸேவித்தல் பகவத் விஷயம் ஸேவித்தல் என்று சொல்லவேண்டிய ஸ்தானத்தில் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் பகவத் விஷய காலக்ஷேபம் என்றே தொன்றுதொட்டுப் பெரியார்கள் வழங்கிவருகிறார்கள். காலக்ஷேப மென்கிற சொல்லுக்கு 'ஸேவிப்பது' என்கிற பொருள் எப்படி கூடுமென்றும், இந்த ப்ரயோகம் எப்படி பொருந்துமென்றும் சில வ்யுத்பந்நர்கள் விமர்சிப்பதுண்டு. ஸ்ரீபாஷ்ய காலக்ஷேப மென்றால் ஸ்ரீபாஷ்யத்தைக் கொண்டு போதுபோக்குவது என்றுதான் பொருள். ஸ்ரீராமாயண காலக்ஷேபம் ஸ்ரீவசநபூஷண காலக்ஷேபம் இத்யாதிகளான ஸகல வ்யவஹாரங்களுக்கும் இதுதான் பொருள். இப்படி வ்யவஹரிக்கத் தொடங்கின பெரியார்களின் திருவுள்ளம் யாதெனில், விஷயங்களை க்ரஹிக்கிறோமோ இல்லையோ அது எப்படியாயினுமாகுக; நல்லபடியாகப் போதைப் போக்கினால் போதும்—என்பதேயாம். ஆர்த்தியில் "முன்னவராம் நம் குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்" என்று மணவாளமாமுனிகள் பணித்தபடியே பெரியோர்களுடைய ஸ்ரீஸூக்திகளால் போதுபோக்குவதென்பது ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப் பயன். ... (20)

21. *காவ்ய சாஸ்த்ர விநோதேந காலோ கச்சதி தீமதாம். அந்யேஷாம் து மநுஷ்யாணாம் நித்ரயா கலஹேந வா* என்கிற ச்லோகமொன்று யாவரு மறிந்ததே. ஆங்காங்கு அவரவர்கள் தம் தம் போதுகளை எப்படி போக்கி வருகிறார்களென்று நாற்புறமும் பார்ப்போமாயின், உத்யோகஸ்தர்கள் வியாபாரிகள், பயிர்த் தொழிலாளர்கள், வக்கீல்கள் முதலானோருடைய போதுபோக்குகள் ஒருவிதமாக நிகழ்ந்து வருகின்றன. சில பேர்கள் தேச வ்ருத்தாந்தப் பத்திரிகைகளைப் படித்தல், நாவல்களைப் படித்தல், சூது சதுரங்கமாடுதல்...... முதலிய காரியங்களிலே காலத்தைச் செலவிடுகிறார்கள். இது தவிர, நால்வர் எண்மர் பதின்மராகக் கூடி ஒரு காசுக்கு முதவாத வம்பு வார்த்தைகளை வெகு அட்டஹாஸங்களுடன் பேசிக்கொண்டும், தங்கள் திரளிலே அந்வயிக்கப் பெறாமல் சுவடிகளிலும் பகவத் பாகவத பரிசர்யைகளிலும் போதுபோக்கிவரும் மஹான்களைப் பற்றி ஏதேனும் பழிமொழிகளைப் பறைசாற்றிக்கொண்டும் பத்து மணி காலத்தைப் பத்து நிமிஷமாகக் கழிக்கின்றவர்கள் சிறிய கிராமம் முதல் பெரிய நகரம் வரையில் எங்குமுள்ளார்கள். அன்னவர்கள் பெறுமானந்தம் அளவுகடந்தது. அவர்களுக்கு உலகமெல்லாம் தருணம். .... .... (21)

22. ஆழ்வார்களுள் இரண்டு ஆழ்வார்கள் போதுபோக்கைப் பற்றி வெகு இன்பமாகப் பேசியுள்ளார்கள். திருமழிசை யாழ்வாரும் நம்மாழ்வாரும். இவ்விருவருடைய இரண்டு பாசுரங்களை எடுத்துக்காட்டுகிறோம் காண்மின். திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதியில் (63) * தரித்திருந்தே னாகவே.........தேரித்தேழுதி வாசித்துங்கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது * என்றருளிய பாசுரம் ஒவ்வொருவரும் நிச்சலும் நினைக்கத்தக்கது. போதுபோக்கும் விதத்தை இவரைப்போல் எடுத்துரைத்தவர் மற்று யாருமில்லை. தெரித்தல் எழுதுதல் வாசித்தல் கேட்டல் வணங்குதல் வழிபடல் பூசித்தல் ஆகிய இவற்றினாலேயே தாம் போதைப் போக்கினதாகவும் இவையில்லையாயின் தம்மால் உயிர்தரிக்க முடியாதாகவும் வ்யக்தமாக விளம்பியுள்ளார். ... ... (22)

23. நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியின் முடிவில் (பா. 86) * கார் கலந்த மேனியான் கைகலந்த வாழியான், பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான்—சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையி னாழ்துயரை, என்னினைந்து போக்குவரிப்போது* என்றுள்ள பாசுரம் சுவைமிக்க பொருளுடைத்து. எம்பெருமானுடைய திருக்குணங்கள் நிரம்பிய ஸ்ரீஸூக்திகளை யநுஸந்தித்தால் பாவங்களும் துன்பங்களும் தொலையுமென்று சில பெரியார் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு; ஆழ்வார் என்ன சொல்லுகிறாரென்றால், பாவங்களும் துன்பங்களும் தொலைந்தால் தொலையட்டும் வளர்ந்தாலும் வளரட்டும், அதைப்பற்றி என்ன கவலை? இவ்வுலகில் நாம் வாழ்கிறவரையில் நம்முடைய போது போக வேண்டுமே; போதை எப்படி போக்குவது? பகவத்குணங்கள் மலிந்த ஸ்ரீஸூக்திகளைக் கொண்டுதானே போதைப் போக்கவேண்டும்; வேறு எதைக்கொண்டு போதைப் போக்குவது! ஒவ்வொருவனும் போதைப் போக்கியாக வேண்டுமே, குணாநுபவம் தவிர வேறு எந்தக் காரியஞ் செய்தால் போது போகும்? வேறொன்றாலும் போது போக்க வரிதன்றோ. சீர்கலந்த சொல்நினைந்து சூழ்வினையி னாழ்துயரைப் போக்காரேல் போக்கா தொழிக; இப்போதை என்னினைந்து போக்குவர்! என்று அருளிச்செய்கிற அழகு என்னே! ... (23)

24. உலகத்தில் ஒவ்வொருவனும் பகவத் குணாநுபவம் பண்ணியா போதைப் போக்குகிறான்? இல்லையே. சூது சதுரங்கமாடியும் உண்டியே உடையே உகந்தோடியும் மாரனார் வரிவெஞ்சிலைக்கு ஆட்செய்தும் மற்றும் பல பல செய்துமன்றோ அவரவர்கள் போதுபோக்கி வருவது. குணாநுபவத்தால் போதுபோக்குவாராக ஒருவரையுங் கண்டிலோமே; "ஸாக்ஷாத்க்ருத ஸ்வபரவ்ருத்தாந்தர்க்கு" என்று ஆசார்ய ஹ்ருதயத்தி லருளிச் செய்கிறபடி உலகியற்கையை ஒன்றறப்பாமல வுணர்ந்தவரான ஆழ்வார் "என்னினைந்து போக்குவ ரிப்போது" என்று குணாநுபவத்தாலன்றிப் போதுபோக்க முடியாதென்று ஏன் சொல்லுகிறார்? என்று கேட்கலாம்; இதற்கு இரண்டு கதைகள் கொண்டு ஸமாதானமடையலாம். அக்கதைகளை 25, 26-ஆம் வார்த்தைகளில் காண்க. ... (24)

25. கள்ளங் கவடறியாத ஒரு ஸ்வாமி தம் திருமாளிகை வாசலில் தென்னைமரம் வளர்த்திருந்தார்; அதில் காய்கள் நிறையக் காய்த்திருந்தன. ஒருநாள் இரவு திருடன் மரத்தின் மீதேறிக் காய்களைப் பறிப்பதாக அவர் அறிந்துகொண்டு இரண்டு மைல் தூரத்திலுள்ள டாணாவுக்குச் சென்று போலீஸ் சேவகனை யழைத்துக் கொண்டுவர எண்ணினார். அங்குப் போய்வர ஒரு நாழிகை ஆகுமாதலால் அதற்குள் கள்ளன் இறங்கி யோடிப் போய்விட்டால் என்ன செய்வதென்றும் ஆலோசித்தார்; ஒரு உபாயம் தோன்றி அப்படியே செய்தார். உள்ளிருந்து பெருமாள் திருவாராதனத் தீர்த்தத்தைக் கொணர்ந்து மரத்தின் கீழே நிறையத் தெளித்துவிட்டு 'இது பெருமாள் தீர்த்தமாகையாலே இதை யாரும் மிதிக்கலாகாது' என்று உரக்கச் சொல்லிவிட்டு உடனே டாணாவுக்குச் சென்றார். 'தேங்காய்க் கள்ளனைக் கையும் பிடியுமாகப் பிடிக்கவேணும், கையோடு வாருங்கள்' என்று சேவகனை யழைத்தார்; அதற்கு அவன் 'ஸ்வாமீ! கள்ளன் இன்னுமா மரத்தின்மேலேயே இருப்பன்? இதுவரையில் அவன் வீடு போய்ச் சேர்ந்திருப்பனே' என்றான். அதற்கு இவர் சொல்லுகிறார்— அம்மரத்தின் கீழ்ப்பாகம் முழுதும் பெருமாள் தீர்த்தத்தைத் தெளித்துவிட்டு கள்ளன் காதிலும் கேட்கும்படி அதை உரக்கச் சொல்லிவிட்டன்றோ நான் வந்திருக்கிறேன்; பரிசுத்தமான அவ்விடத்தை மிதித்துப் போக முடியாதாகையாலே அவன் மரத்தின் மீதுதான் இருப்பன், வாருங்கள் என்றார். தம்மையே யொப்பப் பிறரையும் நினைத்துவிட்டார். (25)

26. பரமைகாந்தியாய்ப் பரம வைதிகரான வொரு ஸ்வாமி இரவில் சயனிக்கும் போது தம் தேவியை யழைத்து 'அடீ! சொம்பிலே ஜலம் வைக்காதே; கவிழ்த்து வை' என்று கட்டளை யிடுவாராம். இவரது கருத்து என்னெனில்; இரவிலே கள்ளன் வந்தால் சொம்பைக் கொள்ளை கொள்ள நினைத்து அதனருகே வந்து அதை யெடுக்கப் பார்க்கும்போது, கையலம்பாமல் சொம்பைத் தொடலாகாதென்று தீர்த்தம் தேடுவனும்; தீர்த்தம் கிடைத்தால் கையை யலம்பிக்கொண்டு சொம்பைக் கவர்ந்துகொண்டு செல்வனும்; தீர்த்தம் கிடையாவிடில் அசுத்தமான கையாலே சொம்பை எப்படி எடுப்பதென்று கூசி சொம்பைத் தொடாமலே போய்விடுவனும்; இதற்காகவே "சொம்பில் ஜலமின்றிக் கவிழ்த்து வை" என்று தேவிக்குக் கட்டளை யிடுவாராம். இதெல்லாம் ப்ராசீந ப்ராமாணிகர்களின் சரிதைகள். தங்களுடைய ஆசாரமே கள்ளர்க்கும் உள்ளதாக அவர்கள் நினைப்பதுபோல் ஆழ்வாரும் பகவத் குணாநுபவத்தாலன்றி மற்றெதனாலும் தமக்குப் போதுபோக்க அரிதா யிருக்கு மியல்வையே உலகில் எல்லாருக்கு முள்ளதாக நினைத்து 'சீர்கலந்த சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையி னாழ்துயரை, என்னினைந்து போக்குவர் இப்போது'' என்று உள்ளமுருக வுரைத்தார். ...(26)

27. *நலத்தால் மிக்கார்* என்றும் *கலையிலங்குமொழியாளர்* என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளுக்கு லக்ஷ்யபூதர்களாய் விளங்கும் மஹநீயர்களைக்குறித்து *அசக்தாஸ் தத்பதம் கந்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே* என்கிறபடியே நிந்தனை மொழிகளைப் பலவகைகளாலும் பரவச்செய்துகொண்டு அதுவே போதுபோக்காக இருப்பவர்களைக் குறித்து இங்கு நாம் தெரிவிக்கவேண்டியதொன்றுமில்லை. ஈச்வரனுடைய ஜகத் ஸ்ருஷ்டியானது மிக விசித்திரமானது. பொய் சொல்வது களவு செய்வது வஞ்சனை பண்ணுவது முதலான தீய குணங்களையும், அஹிம்ஸை இந்த்ரிய நிக்ரஹம் க்ஷமை ஸத்யம் முதலிய நற்குணங்களையும் ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு நகரத்திலும் நாம் பார்த்துவருகிறோம். நற்குணங்களோ தீய குணங்களோ அவரவர்கட்கு இயற்கையாக அமைகின்றனவென்பதே பெரும்பான்மையான கொள்கை. வேம்புக்குள்ள கசப்பும் மாதுளைக்குள்ள புளிப்பும் கரும்புக்குள்ள தித்திப்பும் முதலியன எப்படி ஒரு நாளும் மாறுவதில்லையோ அப்படியே மனிதர்களுக்கும் ஜன்ம ஸித்தங்களான குணங்கள் (நல்லவையோ தீயவையோ) பேர்க்கவும் பேரா என்றே பெரியார் கூறுவர். இளமையில் பொய் சொல்லியும் களவாடியும் வழக்கம் பெற்றவர்கள் அந்த வழக்கத்தை ஒருநாளும் விடமுடிகிறதில்லையென்பதையும், இயற்கையாகவே ஸத்யம் முதலிய நல்ல குணங்கள் அமையப்பெற்றவர்கள் ஒரு நாளும் அஸத்யவழியில் செல்கின்றிலர் என்பதையும் எந்தவூரிலும் எந்த ஜாதியிலும் எக்காலத்திலும் பார்க்கலாம். .... (27)

28. மாதவாரியாக அநுஸந்திப்பதற்குப் பாங்கான நல்வார்த்தைகேளீர். ஐப்பசி மாதத்திலிருந்து புரட்டாசி மாதம்வரை வரிசையாக அநுபவிக்கவேண்டிய விஷயங்கள். ஐப்பசியில் பொய்கை பூதம் பேயாழ்வார்களெனும் முதலாழ்வார்கள் பிள்ளை லோகாசார்யர் மணவாளமாமுனிகள். (2) கார்த்திகையில்-திருமங்கையாழ்வார் திருப்பாணாழ்வார் அருளாளப் பெருமாளெம்பெருமானார் நம்பிள்ளை. (3) மார்கழியில்-தொண்டரடிப்பொடியாழ்வார், திருவத்யயநோத்ஸவப் பெருமை. (4) தையில்-திருமழிசையாழ்வார், எம்பார், கூரத்தாழ்வான். (5) மாசியில்-குலசேகராழ்வார் திருக்கச்சிநம்பிகள். (6) பங்குனியில்-பெரியபிராட்டியார்; நஞ்சீயர். (7) சித்திரையில்-மதுரகவியாழ்வார், எம்பெருமானார் முதலியாண்டான் அனந்தாழ்வான். (8) வைகாசியில்-நம்மாழ்வார் பட்டர். (9) ஆனியில்-பெரியாழ்வார், ஸ்ரீமந்நாதமுனிகள், வடக்குத் திருவீதிப்பிள்ளை. (10) ஆடியில்-ஆண்டாள்,

ஆளவந்தார். (11) ஆவணியில்-ஜீயர்சார்யன், பெரியவாச்சான்பிள்ளை. (12) புரட்டாசியில். வேதாந்ததேசிகன்.......ஆக இவர்களைப்பற்றி விசேஷமாகச் சிந்தனை செய்வது. ... (28)

29. திருமாலையில் * வேதநூற் பிராயம் நூறு * என்கிற பாசுரத்தில் அருளிச்செய்யப் பட்ட விஷயம் இவ்விருள் தருமாஞாலத்திற் பிறந்து வருந்தும் அனைவர்க்கும் ஒக்குமாதலால் ஸாம்ஸாரிகரீதியில் கழியும் காலம்போக மிகுந்த காலத்தை ஒருநொடிப்பொழுதும் பழுதாக்காமே "தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்று கீழே காட்டின திருமழிசைப்பிரான் பாசுரத்தின் கட்டளையிலேயே போக்கி வரவேணும். * யந் முஹூர்த்தம் க்ஷணம்வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே, ஸா ஹாநிஸ் தந்மஹச் சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா * என்கிற ச்லோகத்தையும் * ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே, தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம் * என்கிற ச்லோகத்தையும் பல பெரியார்களிடம் பல கால் கேட்டுத் தரித்து அடிக்கடி அவற்றையே சிந்திப்பதும் பிறர்க்குரைப்பதுமான இயல்புகொண்டிருக்கவேணும். ... (29)

30. ஆண்டாள் தமது திருத்தகப்பனாராகிய பெரியாழ்வாரையே பல படிகளிலும் பின்சென்றிருக்கின்றாள். சில படிகளை எடுத்துரைப்போம். பெரியாழ்வாருக்கு மங்களாசாஸநத்திலேயே பரிவு பொங்கியிருப்பது ப்ரஸித்தம். இது காரணமாகவே பெரியாழ்வாரென்னும் பெயர் அவர்க்கு நிகழ்ந்ததென்பதும் ப்ரஸித்தம். ஆண்டாளுக்கும் மங்களாசாஸநத்திலேயே ஊற்றமென்பது திருப்பாவையில் வெளிப்படை. "சீரிய சிங்காசனத்திருந்து யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள்" என்றவாறே 'வந்த காரியம் யாது? சொல்லவேணும்' என்று கண்ணபிரான் கேட்க; *அன்றிவ் வுலக மளந்தா யடிபோற்றி* என்று தொடங்கி மங்களாசாஸநமே தனக்கும் தொழில் என்னுமிடம் காட்டினாள் கோதை. ஸ்ரீவசநபூஷணத்தில் "ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரும் திருமகளாரும் கோப ஜந்மத்தை ஆஸ்தாநம் பண்ணினார்கள்" என்றருளிச் செய்தபடியே இடைத்தனத்தில் முறுகி நின்றமை இவ்விருவர்க்கும் அஸாதாரணம். ஸ்ரீவில்லிபுத்தூரைப் பாடினவர்கள் இவ்விருவரே. "மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு, இன்னிசைக்கும் வில்லிபுத்தூ ரினிதமர்ந்தாய்" என்கிற ஒரு பாசுரமே பெரியாழ்வாருடையது. ஆண்டாளுடையதும் ஒரு பாசுரமே; "மென்னடை யன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூ ருறைவான்றன்" இத்யாதி. ... ... ... ... (30)

31. திருமாலிருஞ் சோலையிலே அதிக ஈடுபாடு இவ்விருவர்க்குமாம். அங்குள்ள நூபுர கங்கை யென்னும் சிலம்பாற்றை இவ்விருவருமே பாடினர்; "சிலம்பாறு பாயுந் தென்திருமாலிருஞ் சோலையே" என்றார் பெரியாழ்வார். "சந்தொடு காரகிலுஞ் சுமந்து தடங்கள் பொருது, வந்திழியுஞ் சிலம்பாறுடை மாலிருஞ் சோலை" என்றாள் கோதை. ("சிலம்பிய லாறுடைய" என்று பிறகு கலியனும் பாடினர்.) இந்திரகோபம் என்னும் [வடசொல் திரிபான] சொல்லை இவ்விருவருமே பிரயோகத்தில் கொண்டனர்; அதுதன்னையும் திருமாலிருஞ்சோலைப் பதிகங்களிலேயே இருவரும் கொண்டனர். 'இந்திரகோபங்கள் எம்பெருமான் கனிவாயொப்பான் சிந்தும் புறவில் தென் திருமாலிருஞ்சோலை" என்றார் பெரியாழ்வார். "சிந்துரச் செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும், இந்திரகோபங்களே யெழுந்தும் பரந்திட்டனவால்" என்றாள் ஆண்டாள். இந்திரகோபமாவது பட்டுப்பூச்சி.

அதனை எம்பெருமானுடைய திருவவதாரத்தில் பழுப்புக்கு உவமையாகவே பெரியாழ்வாரும் ஆண்டாளும் அநுஸந்தித்தார்கள். ... ... ... (31)

32, தமிழில், பாணித்தல் என்று அபூர்வமாக ஒரு சொல் உண்டு; காலதாமதம் என்பது அதன் பொருள். இச்சொல்லை இவ்விருவருமே பிரயோகத்திற்கொண்டனர். "பாணிக்கவேண்டா நடமின் பண்டன்று பட்டினங்காப்பே" என்பது பெரியாழ்வார் பிரயோகம். "பாணியாது என்னை மருந்து செய்து பண்டுபண்டாக்க வுறுதிராகில்" என்பது ஆண்டாள் பிரயோகம். ஒட்டரா என்பது ஒரு சொல். (ஒட்டம், தரா) என்கிற இரண்டு சொற்கள் ஒன்றுசேர்ந்து ஒட்டரா என மருவிற்று. ஓடிவந்து என்பது இதன்பொருள். [செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்.] இச்சொல்லை இவ்விருவருமே பிரயோகத்திற்கொண்டனர். "என்னிடைக்கு ஓட்டரா அச்சோ வச்சோ" என்பது பெரியாழ்வார் திருமொழி. "ஓட்டரா வந்து என் கைப்பற்றி" என்பது நாச்சியார் திருமொழி. ... (32)

33. தமிழில் குப்பாயம் என்பது ஒரு அபூர்வமான சொல். சட்டையென்பது இதன் பொருள். பெரியாழ்வார் திருமொழியில் "குப்பாயமென நின்று காட்சிதருங் கோவர்த்தன மென்னுங் கொற்றக்குடையே" என்று பிரயோகம். நாச்சியார் திருமொழியில் "போர்த்த முத்தின் குப்பாயப் புகர்மால் யானைக்கன்றே போல்" என்று ஆண்டாளுடையவும் பிரயோகம். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தினுள் இவ்விரண்டிடங்கள் தவிர வேறெங்கும் இச்சொல் காணக்கிடைக்காது. ... ... (33)

34. ஒரு வ்யக்தியே இரண்டு வ்யக்திகளாக வடிவெடுத்துப்பாசுரம் பேசும் திறன் இவ்விருவர் பக்கலிற் காண்பதாம். ஆழ்வார், * என்னுதன் தேவிக்கு * என்னும் திருமொழியில் இரண்டு கன்னிகைகளின் வடிவைத் தாமொருவர் பூண்டு, கண்ணபிரானைப்பற்றி ஒரு கன்னிகை புகழ்ந்து பேசுவதாகவும் இராமபிரானைப்பற்றி மற்றொரு கன்னிகை புகழ்ந்து பேசுவதாகவும் வைத்துப்பாடினர். * கதிராயிரமிரவி யென்னும் திருமொழியில் 'எம்பெருமானைக் கண்டவர்களுண்டோ?" என்று கேட்கிற வொருவருடைய பாசுரமாக முன்னடிகளும், 'இன்ன இடத்திலே கண்டதுண்டு' என்று விடை கூறுவார் பாசுரமாகப் பின்னடிகளும் அமைய வைத்தார். ஆண்டாளும் *பட்டி மேய்ந்தோர் காரேறு* என்கிற திருமொழியில் * இங்கே போதக் கண்டீரே * என்று கேட்பார் பாசுரமாக முன்னடிகளையும், *விருந்தாவனத்தே கண்டோமே* என்று விடை கூறுவார் பாசுரமாகப் பின்னடிகளையும் அமைத்திருப்பது காண்க. பிறகு திருமங்கையாழ்வாரும் இங்ஙனே தோழிமார் இருவரின் ஸம்வாதமாக * மானமரு மென்னோக்கி பதிகம் பாடினர். ... ... (34)

35. * பச்யதி பரேஷு தோஷாந் அஸதோபி, ஸதோபி நைவ குணாந், விபரீதமிதம் ஸ்வஸ்மிந், மஹிமா மோஹாஞ்ஜநஸ்யைஷ :* என்று வேதாந்தவாசிரியர் ஸாதித்தபடி பிறரிடத்தில் இல்லாத தோஷங்களை இருப்பனவாகக் காண்பதும் இருக்கின்ற குணங்களை இல்லை செய்வதும், தம்மிடத்தில் உள்ள தோஷங்களைக் காணமல் இல்லாத குணங்களை இருப்பனவாக ப்ரமிக்கையுமாகிற இந்த மஹாஸம்பத்தை மோஹாஞ்ஜந மஹிமையினல் சிலர் இயற்கையாகவே பெற்று வாழ்கின்றார்கள். ஆனல் இங்கு நாம் தெரிவிக்க விரும்புகின்றதென்னவென்றால், கேண்மின். யானையும் குதிரையும் பெருமாள் புறப்பாட்டுக்கு கப்பீரமாக

உபயோகப்படுவதுபோல மற்ற ஜந்துக்கள் ஏன் உபயோகப்படுவதில்லையென்று ஒருவர் கேட்டால் இதற்கு என்ன பதில் சொல்லுவது? யோக்யதைக்குத் தகுந்தபடி உபயோகம் நேர்கின்றது என்றிவ்வளவே சொல்லமுடியும். நல்ல வழிகளில் போது போக்க யோக்யதை யற்றவர்கள் ஏதோவொரு வழியில் தங்கள் போதைப் போக்கித்தானே யாகவேண்டும். குயிலும் காக்கையும் பெரும்பாலும் வடிவில் ஒத்திருக்கச் செய்தேயும் செய்கையில் ஏன் ஒத்திருக்கவில்லை யென்று யாரை யார் கேட்பது? அதுபோல, சிலர் சீர்கலந்த சொல் நினைந்து போதுபோக்காதே தங்களுக்கு ஸுலப ஸாத்யமான வகையில் போதுபோக்கி வருகின்றார்களென்றால் இதில் வியப்பு ஒன்றுமில்லையே. ஸத்துக்களையும் ஸாதுக்களையும் நிஷ்காரணமாகப் பழிப்பதையே போதுபோக்காகக் கொண்டவர்கள் சிறிது விவேகிகளா யிருந்தால் ஒன்று ஆலோசிக்கவேண்டும்; மஹான்களைப் பற்றித் தாங்கள் செய்யும் நிந்தை களினால் தங்களுக்கு ஜன்ம ஸாபல்யமாகிற வொரு லாபம் ஸித்தித்தாலும் அந்த மஹான் களுக்கு என்ன நஷ்டமுண்டாகுமென்பதை மாத்திரம் விமர்சிக்க வேணுமவர்கள். .... (35)

36. திருவாய்மொழியில் நம்மாழ்வார் அற்புதமாக ஒரு பாசுரம் அருளிச் செய்கி றார்; அதாவது (5—3—5) * கடியன் கொடியன் நெடியமால் உலகங் கொண்ட வடியன், அறிவரு மேனி மாயத்தன்* இத்யாதி. இதன் பொருளின்பத்தைச் சிறிது விவரிப்போம். ஆழ்வார் ஆண்மை தவிர்ந்து பெண்மையடைந்து பேசும் பாசுரமிது. பராங்குசநாயகி யென்று இப்போது ஆழ்வார்க்குத் திருநாமம். இப் பெண்பிள்ளைக்கும் தோழிக்கும் பேச்சு நடந்து வருகிறது. தோழியானவள் இப்பெண்மணியை நோக்கி "பேதாய்! நீ பகவான் பகவானென்று எப்போதும் வாய் வெருவி வீணாக வருந்துகிறாயே; இந்த கஷ்டம் உனக்கு எதுக்காக? அவன் குணசாலியாயிருந்தால் அவனிடத்தில் நீ எவ்வளவும் ஈடுபடலாம்; குணஹீநனான அவனிடத்தில் நீ வீணாக ஆசைவைத்துத் தவிப்பது வேண்டாமே" என்று கூறினளாக, அதற்குப் பராங்குச நாயகி மறுமொழி கூறுகின்றாளிப்பாட்டினால். தோழீ! எம்பெருமானை நான் மஹாகுணசாலி யென்கிறேன், நீயோ அவனை குணஹீந னென்கிறாய். நான் சொல்லுகிறபடி யன்றிக்கே நீ சொல்லுகிறபடியே குணஹீநனானாலும் என் நெஞ்சம் அவனையல்லது அறியாது. அவனிடத்தில் நின்றும் என்னை மீட்பதற்காகவன்றோ நீ அவனை குணஹீநனென்பது. மிகவும் ஸந்தோஷம். குணஹீந னென்பது பற்றியே அவனை நான் மேல் விழுந்து விரும்புகிறேனென்று திண்ணமாகக் கொள்ளவேணும் நீ; அவனிடத்தில் குணமில்லை யென்பதைச் சொல்லவேண்டுமானாலும் தோழீ! நான் சொல்லவேணுமே யல்லது நீ சொல்லலாகுமோ? அவனையும் என்னையும் கூட்டிவைத்தது மாத்திரமேயன்றோ உன் காரியம்; அவனோடு உள்கலந்து பரிமாறினவள் நானே யல்லது நீயல்லையே; அவனிடத்திலுள்ளது தோஷமோ குணமோ எதுவானாலும் எனக்குத் தெரிந்தவளவு உனக் குத் தெரிய ப்ரஸக்தியில்லையே. ஆகையாலே குணமில்லாமையையும் தோஷமுடைமை யையும் என்வாயால் நான் சொல்ல நீ கேளாய் என்று பீடிகை போட்டுக்கொண்டு * கடியன் கொடியனென்று தொடங்கி இரண்டடிகளாலே அவனுடைய குணக்கேட்டைச் சொல்லு கிறாள் பராங்குச நாயகி (ஆழ்வார்). சொல்லுகிற குணக்கேடுகள் எவை யென்னில்; கேண்மின்;—[கடியன்.] தன் காரியத்தை ஸாதித்துக் கொள்வதிலே கனவேக முடையவன். அதாவது, தனக்கு விருப்பமுண்டானால் தானேவந்து மேல்விழுந்து விரைந்து கலக்குமவன் என்கை. [கொடியன்] எதிர்த்தலைபடுகிற கஷ்டம் பாராதே கல்நெஞ்சனாய்ப் பிரிந்து போமவன். [நெடியமால்] மிகவும் பெரியவன் என்பது இச்சொல்லின் பொருள். இதன்

கருத்தாவது, மேல்விழுந்து கலக்கும்போது பிரியவேணுமென்று நினைப்பன். அப்படி அவன் நினைத்ததை யறிந்து 'என்னையனே! பிரியலாகாது பிரியலாகாது' என்று கால்கட்டி விலக்கப் பார்க்கலாமே, அப்படி விலக்குவதற்குக் கூசி நடுங்கி அஞ்சியிருக்க வேண்டும்படி திடீரென்று பாத்துவம் பாராட்டி நிற்பவனென்கை. [உலகங் கொண்ட வடியன்] பிறருடைமையைத் தனக்காக்கிக் கொள்ள நினைத்தால் பின்னை அவர்களுக்கு ஒன்றும் மிச்சப்படாதபடி பண்ணி அவர்களைப் பாதாளத்திலே தள்ளுமவன். [அறிவரு மேனி மாயத்தன்] வடிவைக் கண்டால் ஸர்வஸ்வதானம் பண்ணவிருக்கிறானோ? அன்றி ஸர்வஸ்வமும் கொள்ளை கொள்ளவிருக்கிறானோவென்று தெரிந்துகொள்ள முடியாதபடி ஆச்சரியமான தன்மையை யுடையவன். அடியேன் குடியேனென்று சில சொல்லி மயக்கிக் கண்ணிலே மணலைத் தூவி யோடிப் போமவன். இப்படிப்பட்ட குணக்கேடுகளைக் கோடிக்கணக்காகச் சொல்லவேணுமானாலும் நானன்றோ சொல்லவேணும், எனக்கன்றோ மருமம் தெரியும். தோழீ! இவை உன்னாலும் சொல்லமுடியாது, இதற்கென்றே இட்டுப் பிறந்த சிசுபாலாதிகளாலும் சொல்ல முடியாது. இவ்வளவு குணக்கேடுகளையும் நான் அறிந்துவைத்தேயன்றோ இவ்விஷயத்தி லீடுபட்டுக் கிடக்கிறது. இவை தோஷங்களே யானாலும் அவனுடைய தோஷங்களாகையாலே அவன் ஸம்பந்தத்தையிட்டு இவை நமக்கு உபாதேயங்களே யென்று என்னெஞ்சு கொள்ளுகின்றது; (அல்லது) கீழ்ச்சொன்ன விசேஷண பூதங்களான குணக்கேடுகளில் நோக்கு இல்லாமே விசேஷ்ய பூதனான அவனை மாத்திரமே என்னெஞ்சு பற்றியிருக்கின்றது. மாயாவாதிகள் "நிர்விசேஷ சிந்மாத்ரம் ப்ரஹ்ம" என்று விசேஷண ஸம்பந்த கந்தமுமற்ற விசேஷ்ய அம்சத்தை மாத்திரமே அங்கீகரிக்கிறாப்போலே குணமோ குணக்கேடோ ஆகிய விசேஷணாம்சத்தில் கண் செலுத்தாமல் வெறும் விசேஷ்யமான அவனளவில் மாத்திரமே என்னெஞ்சு ஊன்றியிருக்கின்றது என்பதாக [ஆகிலுங் கொடியவென்னெஞ்சம் அவனென்றே கிடக்கு மெல்லே] என்கிற மூன்றாமடி அமைந்தது. .... .... (36)

37. இவ்வுலகில் பிறக்கின்றவர்கள் யாவரும் தோஷமே நிரம்பியவர்கள் என்றாவது குணமே நிரம்பியவர்கள் என்றாவது யாரும் சொல்லமுடியாது. உயர்ந்த பதவியில் இருக்கின்ற மஹான்கள் முதற்கொண்டு மிகவும் தாழ்ந்திருப்பவர்கள் வரையில் யாரை யெடுத்துக் கொண்டாலும் ஒவ்வொருவரிடத்திலும் குணங்களும் தோஷங்களும் கலந்திருக்குமே யல்லது பரிபூர்ண குணசாலியாகவும் பரிபூர்ண துஷ்டனாகவும் ஒரு மனிதனையும் காட்ட முடியாது. எவரும் அயலாரை வஞ்சித்து விடலாமானாலும் தம்முடைய ஆத்துமாவைத் தாம் வஞ்சித்து விடமுடியா தாதலால் தம் தம்மிடத்திலுள்ள குண தோஷங்களை உள்ளபடி அவரவர்கள் கட்டாயம் அறிந்தே யிருப்பார்கள். அப்படி யறிந்திருந்தும், உள்ள குணங்களை மிகவும் அதிகப்படுத்திக் காட்டுவதற்கும், உள்ள தோஷங்களை அடியோடு மறைத்துக் கொள்வதற்குமே ஒவ்வொருவரும் முயற்சி செய்வது வழக்கம். அதில் ஸாமான்ய ஜனங்கள் ஏமாந்து போய்விடுவதும் நிபுணர்கள் உண்மையை அறிந்துகொள்வதும் இயல்பு. .... (37)

38. பொதுவில் ஒவ்வொருவருடைய நோக்கமும் எப்படிப்பட்டதென்றால் 'நம்மிடத்தில் எல்லாருக்கும் நல்ல மதிப்பு உண்டாகவேணும்; நம்மை நல்ல குணசாலியென்றே எல்லாரும் கொள்ளவேண்டும்; நம்மிடத்தில் தீமையிருப்பதாக யாரும் கருதக்கூடாது' என்றே ஆசைகொண்டு அதற்கு ஏற்றாப்போல் நடந்துகொள்வதிலேயே பெரும்பாலும் ஜனங்களின் நோக்கம் காண்கிறது. ஞானம், செல்வம், அழகு முதலானவை மிகச்

சிறிதளவு இருந்தாலும் அவற்றை மிகவும் அதிகமாகவே காட்டிக்கொள்ள விரும்புவாரும் உண்டு. அவை அதிகமாகவே யிருந்தும் அவற்றை டம்பமாகக் காட்டிக்கொள்ள விரும்பாமல் வெகு அடக்கத்தோடு இருப்பவர்களும் உண்டு. சில பேர்கள் தங்களுடைய நிலைமையை நன்றாகத் தெரிந்துகொண்டு 'நாம் எப்படி குற்றங்களுக்குக் கொள்கலமாக இருக்கிறோமோ இப்படித்தான் உலகில் பலரும் இருக்க நேரிடும்; இவ்வுலகுக்கு இது ஆச்சரியமன்று; ஆகலால் பிறருடைய குற்றங்களைப் பற்றி நாம் கவனிப்பது வேண்டா' என்று கொண்டு பிறரது குற்றங்களில் சிறிதும் புத்தியைச் செலுத்தாமல் தங்கள் காரியத்தோடே நிற்பர்கள். இப்படிப்பட்ட அதிகாரிகள் அதிகமாகத் தேறமாட்டார்கள். நூற்றில் ஒருவர் தேறினால் விசேஷம். 99 பேர்களின் இயல்வு எப்படிப்பட்டதென்றால் தம்முடைய நிலைமையைத் தாம் அடியோடு மறந்து எப்போதும் பிறரைப் பற்றிய பழிப்புரையே போது போக்காக இருப்பதாம். அன்னவர்கள் வாய்கொண்டு பேசத் தொடங்கினாலும் கை கொண்டு எழுதத் தொடங்கினாலும், இன்னாரைப் பற்றி இன்னவிதமாகத்தான் பேசுவர்கள் எழுதுவர்கள் என்கிற வரம்பு சிறிதும் இராது. ஒன்றுமறியாத மூடர்களை உயரத் தூக்கி வைத்திடவும் புகழ் பெற்ற பெரியோர்களைப் பாதாளத்திலே தள்ளிவிடவும் வல்லவர்களே. ... (38)

39. சில நபர்களிடத்தில் தூஷிக்கவேண்டிய காரணம் பூர்த்தியாக இருந்தாலுங்கூட தூஷிக்கும் வழியைக் கனவிலு மறியாமல் பூஷிப்பதே செய்வார் நல்லோர். பூஷிக்க வேண்டிய காரணம் பூர்த்தியாக இருந்தாலுங்கூட தூஷிப்பதையே தொழிலாகக் கொள்வர் தீயோர். எங்கும் தூஷிப்பவர்கள், பலபல மஹான்களால் கொண்டாடப் படுகின்றவர்களைத்தான் தூஷிப்பர்கள். யோக்யதை யில்லாதவர்களை தூஷிப்பதனால் என்ன லாபம்? என்ன த்ருப்தி? அதை யார் கவனிப்பார்கள்? அது பயனற்ற பணியாகுமே. நிறையப் பழங்கள் பழுத்துத் தொங்கப்பெற்ற மரங்களின்மீது கல்லடி தடியடி விழுமேயல்லது மொட்டை மரத்தையும் மலட்டு மரத்தையும் அடிப்பாரார்? அதுபோல் ஞானனுட்டானங்கள் நிரம்பியும், பலவகைகளில் புகழ்பெற்றும், பலரால் வணங்கப்பட்டும் விளங்குகின்ற மஹான்கள்பேரில்தான் தூஷணைகள் ஏற்படுமேயல்லது, 'யாரோ வழிப்போக்கன்' என்னும்படியான ஸாமான்ய ஜனத்தின்மீது பைத்தியக்காரன்கூட தூஷணைகள் செய்ய மனங்கொள்ளமாட்டான். ஆகவே, எந்த நபரின்மீது விசேஷ தூஷணைகள் ஏற்படுகின்றனவோ அதுவே காரணமாக அந்த நபர் மிக்க பெருமை வாய்ந்தவர் என்பது உறுதியாகும். உண்மையில் அவர் பெருமை வாய்ந்தவராக இல்லாவிடினும், தூஷணைகள் ஏற்படுவது காரணமாகவே அவர்க்குச் சிறந்த பெருமை அவசியம் ஒப்புக்கொள்ள வேண்டியதே. அமுதனார் அருளிய இராமானுச நூற்றந்தாதியில் "பழிக்கில் புகழ்" என்றது காண்க. இப்பாசுரத்தை விவரித்தபடியே யிது. ... (39)

40 மஹான்களைப் பிறர் தூஷிப்பதானது உண்மையில் பூஷிப்பதாகவே முடிவு பெறும். அவர்களுடைய கீர்த்தி எங்கும் நன்றாகப் பரவுவதற்கு தூஷணைகளே பெரிய கருவியாகும். பூஷிப்பது ஒரு மூலையில் அடங்கிப்போகும். தூஷிப்பதுதான் உலகமெல்லாம் பரவும். பாகவத தூஷணையாக ஒரு புத்தகம் வெளிவந்தால் அது எத்தனைபக்கமாயிருந்தாலும் எவ்வளவு வேலையிருந்தாலும் விட்டிட்டு வெகுரஸமாக வாசிக்க ருசியுண்டாகும். மெய்ஞ்ஞான விளக்கம்' என்று ஒன்று வெளிவந்தால் அது நாலே பக்கமாயிருந்தாலும் வாசிக்கத் தொடங்கும்போதே கண்ணுறக்கமதாகும். உலகப்போக்கு இது. .... (40)

41. ஓரிடத்தில் இருவர்கூடி ஒரு மஹானைப்பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தால் அங்கு மூன்றாவது நபர் வந்து சேருவது மிகவும் அரிது. அதுவே ஒரு மஹானைப்பற்றி தூஷிக்குமிடமாயிருந்தால் நாலு நிமிஷத்தில் நானூறு பேர்கள் கூடிப் பிரளயமாகும். இதை எங்கும் எளிதாகக் காணலாம். வாஸ்தவமாக இயற்கையாகவே ஸகல ஜனங்களுக்கும் பரதூஷணைகள் செய்வதிலும் அவற்றை ஆதரவோடு கேட்பதிலுமே விருப்பம் செல்லும். இவ்வியல்வுக்குத் தப்பிப் பிழைப்பவர் யாரோ சிலர். ஸ்ரீராமாயண கதைகளில் ஒரு சிறிதும் தெரிந்து கொள்ளாதவர்களும் 'ராமன் வாலிவதம் செய்தது மிகவும் தப்புத்தான்' என்று தூஷியாமலிருப்பதில்லை. ஸ்ரீ பாகவதம் ஸ்ரீ விஷ்ணு புராணம் ஹரிவம்சம் முதலானவற்றில் ஒரு வரியும் காணாதவர்களும் கேளாதவர்களுங்கூட 'கிருஷ்ணன் கோபிகளோடு விளையாடினது மிகவும் பிசகுதான்' என்று தாராளமாகத் தூஷித்தே தீருவர். அங்ஙனம் தூஷிப்பவர்களிடத்தில்தான பகவானுக்கு மிகவும் உகப்பு என்று நூல்கள் முறையிடுகின்றன. "வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும்" இத்யாதி திருமழிசைப்பிரான் பாசுரம் காண்க. .... (41)

42. பெருமாள் பித்ருவாக்ய பரிபாலன நிமித்தமாகக் காட்டுக் கெழுந்தருளிச் சித்திரகூடத் தாழ்வரையிலே இனிது எழுந்தருளி யிருந்தபோது ஸ்ரீபரதாழ்வான் அயோத்தியில் சக்ரவர்த்தியின் சரம கைங்கரியத்தை நிறைவேற்றிப் பெருமாளை வனவாஸத்தில் நின்று மீட்டுத் திருவயோத்திக் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போக ஸபரிவாரனாய் அவ்விடம் வந்து சேர்ந்து தந்தை துஞ்சிய செய்தியைச் சொல்ல, பெருமாள் நெடும்போது மூர்ச்சித்திருந்து பிறகு உணர்ந்தருளி, பிராட்டியையும் இளையோனையும் நோக்கிக் கூறுகின்ற வார்த்தை—"**सीते! मृतस्ते श्वशुरः पित्रा हीनोऽसि लक्ष्मण!**—ஸீதே! ம்ருதஸ் தே ச்வசுர: பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண" என்பதாம். ஸீதே! உன் மாமனார் துஞ்சினார்; இளையா நீ தந்தையை இழந்தவனாயினை என்றாராயிற்று; 'ஐயோ! நம் தகப்பனார் துஞ்சினாராமே!! என்றன்றோ கதற வேண்டும்; 'ஸீதே! ம்ருதஸ் தே ச்வசுர:' (**सीते! मृतस्ते श्वशुरः**) என்று பிராட்டியை நோக்கிச் சொன்னது ஒருவாறு பொருத்தமாகவே யிருக்கட்டும்; இளையோனை நோக்கி "பித்ரா ஹீநோஸி" என்றது செவ்வைக் கேடாகவன்றோ வுள்ளது. சக்ரவர்த்தி தமக்கும் தந்தையாயிருக்க பெருமாள் 'நம் தந்தை துஞ்சினாரப்பா!' என்பதன்றோ முறை; சக்ரவர்த்தியோடு தமக்கு ஒரு ஸம்பந்தமுமில்லைபோல இங்ஙனம் பேசியது என்னே! என்று சிந்திக்கத்தக்கதாக வுள்ளது. இதற்கு ஸமாதானம் "ஸ்ரீராமாயண ரஸ்ய ரஹஸ்யம்" என்னும் நமது நூலில் காணத்தக்கது. அது தென்மொழியிற்போல வடமொழியிலுமுள்ளது. .... (42)

43. பெருமாள் ராவண ஸம்ஹாரம் செய்து தலைக்கட்டிப் புஷ்பகவிமானத்தில் ஏறிச் செல்லுகையில் அயோத்திமாநகர் அணித்தானவாறே 'ஸீதே! இதோ நம்மூர் வந்துவிட்டது' என்று சொல்லவேண்டியிருக்க அங்ஙனம் கூறாது "**एषा सा दृश्यते सीते! राजधानी पितुर्मम**—ஏஷா ஸா த்ருச்யதே ஸீதே ராஜதாநீ பிதுர் மம" என்கிறார்; இதோ என் தகப்பனாருடைய ராஜதானி காண்கிறது பார் என்றார். தகப்பனார் துஞ்சிப் பதினான்கு வருஷமாகியும் பெருமாள் திருவுள்ளத்தில் தந்தையின் சிந்தனையே குடிகொண்டிருக்கின்றமையை நோக்குங்கால் பெருமாளுடைய பித்ருபக்தி ஒப்புயர்வற்றதென்பது தெரியவரும். ... (43)

44. ***वेदेषु पौरुषं सूक्तं धर्मशास्त्रेषु मानवम्। भारते भगवद्गीता पुराणेषु च वैष्णवम्॥**
வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்ம சாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத் கீதா புரா

ணேஷு ச வைஷ்ணவம்.* என்னும் வசனமானது, வேதங்களுக்குள்ளே புருஷஸூக்தமும், தர்ம சாஸ்த்ரங்களுக்குள்ளே மநுஸ்ம்ருதியும், மஹா பாரதத்தினுள்ளே ஸ்ரீ கீதையும், புராணங்களுக்குள்ளே புராணரத்னமென்று ஆளவந்தார் திருநாமஞ் சாத்தின ஸ்ரீ விஷ்ணு புராணமும் சிறந்தவையென்று தெரிவிக்கின்றது. பஞ்சம வேதமான மஹா பாரதத்தி னுள்ளே கீதோபநிஷத்தின் சிறப்பைப்பற்றி நாம் விவரிக்க வேணுமோ ? ஸகல மதஸ்தர்களும் ஆதரித்து ஸகல மதஸ்தர்களும் வியாக்கியானங்களும் மொழி பெயர்ப்புகளும் பாஷ்யங்களும் விமர்ச வியாஸங்களும் இயற்றப்பெற்ற கீதையின் சிறப்பு ஒப்புயர்வற்றதே. ... (44)

45. கீதையில் இரண்டா மத்யாயத்தின் பன்னிரண்டாவது சுலோகத்திலிருந்தே சாஸ்த்ராரம்பமென்று கொள்ளலாம். அதற்குக் கீழுள்ள பாகங்களெல்லாம் அவதாரிகை யாக நிற்கிறது. அந்த பன்னிரண்டாவது சுலோகம் எவ்விதமாக வுள்ளதென்று பார்க்க வேணும். "न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः। न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ [ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:, ந சைவ ந பவிஷ்யாமஸ் ஸர்வே வயமத: பரம்] என்பதே அந்த ச்லோகம். இதன் பொருள் யாதெனில், ஸர்வேச்வரனாகிய நானும் இதற்கு முன் கழிந்த அநாதி காலத்திலும் இருந்தவனே; அர்ஜுனா ! நீயும் இந்த அரசர்களுமான க்ஷேத்ரஜ்ஞர்களுங்கூட முன்பும் இருந்தவர்களே. முன்பு இருந்தது மாத்திரமேயன்றிக்கே மேலுள்ள காலமுமெல்லாம் நானும் நீங்களும் இருக்கப் போகிறவர் களே என்பதாம். ஸர்வேச்வரனும் பரமாத்மாவான நான் நித்யன் என்பதில் எப்படி ஸந்தேஹமில்லையோ, அப்படியே க்ஷேத்ரஜ்ஞர்களாய் ஜீவாத்மாக்களான நீங்களும் நித்யர்க ளென்பதில் ஸந்தேஹமில்லையென்று பகவான் தானே சோதி வாய் திறந்து பணித்துளன். இதனால் ஸர்வேச்வரனை பகவானிற் காட்டிலும் ஜீவாத்மாக்களுக் குண்டான பேதமும், அந்த ஜீவாத்மாக்களுக்குப் பரஸ்பர முண்டான பேதமும் பாரமார்த்திகமென்று பகவான் தானே வ்யக்தமாகத் தெரிவித்ததாய்த் தேறுகின்றது. இந்த ச்லோகம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அடிப்படையாக வுள்ளதென்று நன்குணரலாம். நமது பாஷ்யகாரர் இந்த ச்லோகத்திற்கு இட்டருளி யிருக்கின்ற பாஷ்யம் மிகவும் விபுலமாக வுள்ளது. ... (45)

46. கீதையில் (7–16.) चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन। आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥—சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப.* என்பதில் ஆர்த்த: ஜிஜ்ஞாஸு: அர்த்தார்த்தீ. ஜ்ஞாநீ என்று நால்வகை யதிகாரிகள் கூறப்படுகிறார்கள். இவர்களை விவரிக்கின்ற சங்கராசார்யர் தமது பாஷ்யத்தில் आर्तः-तस्करव्याघ्ररोगादिना अभिभूतः आपन्नः ; जिज्ञासुः— भगवत्तत्त्वं ज्ञातुमिच्छति यः ; अर्थार्थी – धनकामः ; ज्ञानी—विष्णवोस्तत्त्ववित् " என்று எழுதி யுள்ளார். மத்வ பாஷ்யகாரரான ஆனந்த தீர்த்தர் ஒரு விவரணமு மெழுதவில்லை. சங்கரா சாரியர் திருடர் புலி பிணி முதலியவற்றால் துன்பமடைந்தவனை ஆர்த்தனென்றும், பகவானை யறிய விரும்புகிறவனை ஜிஜ்ஞாஸுவென்றும், தனம் பெற விரும்புமவனை அர்த்தார்த்தி யென்றும், விஷ்ணு தத்த்வமறிந்தவனை ஞானி யென்றும் விவரித்திருக்கின்றார். நமது பாஷ்ய காரரான ஸ்வாமி யெம்பெருமானார்—ப்ரஷ்டைச்வர்ய காமனை ஆர்த்தனென்றும், அபூர்வைச் வர்யகாமனை அர்த்தார்த்தி யென்றும், கைவல்ய காமனை ஜிஜ்ஞாஸு வென்றும் ஸ்வஸ்வரூப முணர்ந்தவனை ஞானியென்றும் விவரித்தருளுகிறார். இங்ஙனே விலக்ஷணமான விவரணத்தை நம் ஸ்வாமி செய்தருளியதற்கு மூலமென்ன ? என்று விமர்சிக்குமளவில், ஆழ்வார்களின்

ஸ்ரீஸூக்தியே மூலமென்னத் தட்டில்லே. திருவாய்மொழியில் * ஒருநாயகப் பதிகமும், திருப்பல்லாண்டும் மூலம். இதை நம்முடைய த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வத்தில் விரிவாகக் காண்க. அது ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் அவசியம் காணத்தக்க நூல். ... (46)

47. எம்பெருமான் நம்மைக் காத்தருள்வதற்குப் பல பல அவதாரங்கள் செய்கிறான். அவதாரம் என்னுஞ் சொல்லுக்கு இறங்குவது—கீழேயிழிதல் என்று பொருள். மேலான நிலைமையை விட்டுத் தாழ்வான நிலைமையை ஏற்றுக் கொள்ளுதலே அவதாரமென்றதாயிற்று. எங்குமுளன், என்றுமுளன், எல்லாப் பொருள்களாயுமுளன் என்ன நிற்பதே எம்பெருமானுக்கு மேலான நிலைமையாகும். அந்நிலைமையினின்று நீங்கி, குறிப்பிட்ட வோரிடத்திலுள னாகவும் குறிப்பிட்டவொரு காலத்தி லிருப்பவனாகவும், குறிப்பிட்டவொரு திருமூர்த்தியாயுள்ளவனாகவும் வந்து பிறந்த பிறப்பு அவதாரமெனப்படுவது மிகப் பொருத்தம். வேதாந்த நூல்கள் எம்பெருமானை ஊனக்கண்ணால் காணத்தகாதவனாக வோதுகின்றன. *ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம்* என்றும் *ந மாம்ஸசக்ஷுரபிவீக்ஷதே தம்* என்றும் வடமொழி வேதம் கூறுவதுபோலவே தென்மொழி வேதமும் *கண்கள் காண்டற்கரியன்* என்றும் *கட்கிலி* என்றும் கூறுகின்றது. இப்படிப்பட்ட எம்பெருமான் “ஸகலமநுஜநயநவிஷயதாம் கத:” என்று கீதாபாஷ்ய ப்ரவேசத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்கிறபடியே எல்லாருடைய கண்ணுக்கு மிலக்காகி அவதாரம் செய்வது எதற்காகவென்னில்; கீதையில் நான்காமத்யாயத்தில் அப்பெருமான்தானே அவதாரப்ரயோஜனத்தை அருளிச்செய்துவைத்தான். ... (47)

48. “பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே.” என்கிற சுலோகம் அவதார ப்ரயோஜனத்தைக் கூறுமது. ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களை யொழிப்பதற்காகவும் தருமநெறியை ஸ்வாநுஷ்டானத்தாலே நிலைநிறுத்துவதற்காகவும் தான் வந்து பிறப்பதாகச் சொல்லிவைத்தான். இக்காரியங்களை அவதரித்தே செய்யவேணுமோ? ஸங்கல்ப மாத்திரத்தாலே அனைத்தையும் நிர்வஹிக்க வல்லவனன்றோ அவன். அத்தகைய சக்தி வாய்ந்த அவன் *நாட்டில் பிறந்து படாதன பட்டு* என்று நம்மாழ்வா ரருளிச் செய்கிறபடியே படாதபாடுகளும் படும்படி நாட்டில் வந்து பிறக்கவும் வேணுமோ? என்று ஒரு சங்கை தோன்றும். இங்கு நம் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்வது கேளீர். அது அடுத்த வார்த்தையில் விளங்கும். ... (48)

49. துஷ்டர்களைத் தொலைப்பதென்கிற காரியம் ஸங்கல்ப மாத்திரத்தினால் ஸாதித்து விடவுங்கூடும்; ஸாது பரித்ராணம் அப்படி ஸாதிக்கமுடியாது; ஏனென்றால் எம்பெருமானை நேரில் காணவேணுமென்றும் கண்டு பேசவேணுமென்றும் தழுவி முழுசிப் பரிமாற வேணுமென்றும் விரும்புமவர்களே ஸாதுக்களாதலால் அன்னவர்களை ஸம்ரக்ஷிப்பது ஸங்கல்ப ஸாத்யமாகாது என்றார்—சுதாவதாரண ஸ்ரீபாஷ்யத்தில். துஷ்டர்களைத் தொலைப்பதுங்கூட ஸங்கல்ப ஸாத்யமாகாதென்று கருதினர் நஞ்சீயரென்னு மாசிரியர்; “ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச் செய்வர்” என்கிற ஸ்ரீவசநபூஷண சூர்ணையின் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலே அது காணத்தக்கது. ... ... (49)

50. நம்மாழ்வார் திருவாய்மொழியில் *சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ் சோதியுருவை அங்குவைத் திங்குப் பிறந்த* என்றும், *மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்* என்றும் இங்ஙனே கீதையை யடியொற்றி அருளிச்

செய்திருக்கச் செய்தேயும் ரஸோக்தியாக வேறு சில ப்ரயோஜனங்களையும் அருளிச் செய்திருக்கக் காண்கிறோம்; *காணாயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன் பெற்ற ஆனாயன்* என்கிறார் திருமங்கையாழ்வார்; திருவாய்ப்பாடியில் தயிரும் நெய்யும் பாலும் வெண்ணெயும் பாழ்படாமே அவற்றைப் பருகுவதற்காகவே கண்ணனுடைய திருவவதாரமென்றார். கோபிகளின் பேச்சாலே பேசுகின்ற நம்மாழ்வார் *இன்று இவ்வாயர் குலத்தை வீடுய்யத் தோன்றிய கருமாணிக்கச் சுடர்* என்று திருவாய்ப்பாடியை ஸத்தை பெறுவிப்பதற்காகவே கண்ண னவதரித்ததாகக் கூறினர். கோபிகளின் ஸமாதியாலே பேசுகின்ற ஆண்டாளோவென்னில் *கஞ்சன் வலை வைத்தவன்று காரிருளெல்லில் பிழைத்து, நெஞ்சு துக்கஞ் செய்யப் போந்தாய் நின்றவிக் கன்னியரோமை* என்கிறாள்—கம்ஸனிட்ட காவலுக்குத் தப்பிப் பிழைத்துத் திருவாய்ப்பாடியில் வந்து சேர்ந்தது கோபிமார்களைத் துன்பப்படுத்தவே யென்கை. இவையெல்லாம் ஸம்ப்ரதானங்களான ப்ரயோஜனங்களே யென்று கொள்ளத்தகும். ரஸோக்தி விசேஷங்க ளிருந்தபடி. .... ... (50)

51. திருவிருத்தத்தில் *சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந் தரா நிற்கவே யங்கு, ஓர் மாயையினா லீட்டிய வெண்ணெய் தொடுவுணப் போந்து இமிலேற்று வன் கூன் கோட்டிடை யாடினை கூத்து அடலாயர்தங் கொம்பினுக்கே* என்றுள்ள பாட்டு நம்மாழ்வாருடைய விலக்ஷண ஸாக்ஷாத்காரம். "முந்நீர் வாழ்ந்தார் சூட்டும் கோவையாழி யென்கிற ஸாக்ஷாத் க்ருத ஸ்வபரவ்ருத்தாந்தர்க்கு" என்கிற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையைக் காண்பது. திருநாட்டில் நித்யஸூரிகள் பரமபதநாதனுக்கு நீராட்டம் கண்டருளப் பண்ணித் தூபம் ஸமர்ப்பிக்கும்போது புகையினால் திருமுகமண்டலம் மறையும்; பிறகு தீபம் ஸமர்ப்பிக்கும்போது திருமுக மண்டல ஸேவையாகும். இந்த தூபதீபங்களினிடையில் அப்பரமபதநாதன் விண்ணுலகில் நின்றும் மண்ணுலகில் வந்து கண்ணனா யவதரித்து "பிறந்தவாறும் வளர்ந்தவாறும் பெரிய பாரதம் கைசெய்து" என்னும்படியான ஸகல காரியங்களையும் தலைக்கட்டிக்கொண்டு, (விண்ணுலகில்) தீபாராதனையாகும்போது திருமுக மண்டல ஸேவை காட்ட ஸித்தனா யிருக்கிறபடி. இதனால், ஸாக்ஷாத் பரமபதநாதனே கண்ணபிரானாக வந்து பிறந்தவனென்பதும், திருநாட்டில் நடைபெறும் திருவாராதனத்தின் வைலக்ஷண்யமும் தெரிவிக்கப்பட்டவாறு. .... ... (51)

52. கண்ணபிரான் திருவவதரித்தது ரோஹிணீ நக்ஷத்திரமென்பது புராணப்ரஸித்தமும் ஜகத் பிரஸித்தமுமாம். இவ்வவதாரத்தில் விசேஷித்து ஈடுபட்டவரான பெரியாழ்வார், திருவோணத்தில் அவதரித்ததாகப் பலவிடங்களி லருளிச் செய்கிறார். *அத்தத்தின் பத்தா நாள் தோன்றிய வச்சுதன்* *நின்ற மராமரம் சாய்த்தாய் நீ பிறந்த திருவோணம் இன்று நீ நீராடவேண்டும்* *திண்ணார் வெண் சங்குடையாய்! திருநாள் திருவோண மின்றேழு நாள்* என்பன அவருடைய பாசுரங்கள். இங்ஙனே யருளிச் செய்வது எங்ஙனே பொருந்துமென்று சிந்திக்க வேண்டா. அழகிய சிங்கர் அவதரித்தது ஸ்வாதீ நக்ஷத்திரமா யிருக்கச் செய்தேயும் *திருவோணத் திருவிழவி லந்தியம் போதி லரியுருவாகி* என்று அவரையும் திருவோணத்தி லவதரித்தவராக அருளிச் செய்தவரல்லரோ பெரியாழ்வார். *வேதப் பயன் கொள்ளவல்ல விட்டுசித்தன் வேதத்தை யடியொற்றி யருளிச் செய்தாரென்பது தத்துவம். யஜுர் வேதத்தில் நாலாவது காண்டத்தில் நாலாவது ப்ரச்நத்தில் ஸகல நக்ஷத்திரங்களுக்கும் தேவதைகளைக் கூறுமிடத்து "ச்ரோணா நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா" என்றன்றோ ஓதிற்று. (52)

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

---

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய துரந்தரர்களான ஆழ்வார்களின் திருவவ தார காலம் நம் முன்னேர்கள் குருபரம்பராப்ரபாவாதி நூல்களில் எழுதிவைத்திருக்கிறபடிதான் பொருத்தமானதென்று நன்கு நிரூபிக்கும் நூல்

# ஆழ்வார்களினவதாரகால நிர்ணயம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

*அண்ணங்கராசாரியர் ஸ்வாமி*

எழுதியது

*ஸ்ரீராமாநுஜன் வெளியீடு* 171


ஸ்ரீ காஞ்சீ ஸ்ரீ வேங்கடேச்வர அச்சுக்கூடம்

கிடைக்குமிடம் :—

**P. B. ANNANGARACHARYA,**

**Editor, Granthamala, L. Kancheepuram.**

30—3—63

விலை — 60 NP

ஸ்ரீ:

# ஆழ்வார்களினவதார கால நிர்ணயம்

[ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.]

## — முதல் அதிகாரம் —

### மயிலை மாதவ தாஸர் பதிப்பாராய்ச்சி.

1. திவ்வியப் பிரபந்தப் பதிப்புகள் பல பல இருந்தாலும் "மயிலை மாதவ தாஸன் பதிப்பு" என்று தற்காலம் மிகப் பிரசித்தி பெற்றுள்ள பதிப்பைப் பற்றியே இங்கு ஆராய்ச்சி வெளியிடப்படுகின்றது. மயிலை மாதவ தாஸன் என்பவர் சிலவாண்டுகட்கு முன்பு பூதவுடல் நீத்துப் புகழுடம்பு பெற்றவர். இவர் ஸ்மார்த்த ப்ராஹ்மண வகுப்பைச் சேர்ந்தவர்; 'மயிலை மாதவ தாஸன்' என்னும் பெயரை இவர் புனைந்து கொண்டாரென்று கேள்வி. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திலும் அதைச் சார்ந்த நூல்களிலும் இப்பெரியார் மெய்யன்பு வாய்ந்தவரென்பது நமது நம்பிக்கை. வைணவப் புலவர்களின் காலக்ஷேப கோஷ்டிகளிலும் உபந்யாஸ கோஷ்டிகளிலும் அந்வயிக்கப் பெற்றதனால் இவர்க்கு இவ்வன்பு தோன்றியதென்று பலர் பகரக் கேட்டிருக்கை. இவர் நம்முடைய சென்னையுபந்யாஸ கோஷ்டிகளில் நெடுங்காலம் அந்வயித்திருந்தும் இவரை நாம் வெகு நாள் வரை அறியாமலேயிருந்தோம்.

2. இப்பெரியார் முதன் முதலாக நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை நல்ல முறையில் பதிப்பித்தனர். பிறகு திருப்பாவையின் வியாக்கியானங்களான மூவாயிரப்படி ஆறாயிரப் படி முதலானவற்றையும் பதிப்பித்தனர். இக்காரியங்களை இவர் ஸ்ரீவைஷ்ணவப் பெரியார்களின் உதவிகொண்டே செய்ததாகக் கேள்வி. இவருடைய நாலாயிர திவ்யப் பிரபந்தப் பதிப்பு 1943-ஆம் ஆண்டில் முதன்முதலாக நிகழ்ந்திருக்கின்றது. பிறகு இரண்டாம் பதிப்பு 1950ல் வெளிவந்தது. மூன்றாம் பதிப்பு மிகவும் ஸமீபகாலத்தில் வெளிவந்துள்ளது. அதாவது 1962 டிஸம்பரில் அச்சிடப் பெற்று (20—3—1963)ல் சென்னை கேசவப் பெருமாள் தேவஸ்தானத்தில் பல பெரியார்கள் மூலமாகக் குலாவப் பெற்று வெளிவந்துள்ளது. 'உயர்திரு. மணலி. லக்ஷ்மண முதலியார் ஸ்பெசிபிக் எண்டோமெண்ட்ஸ்' மூலம் வெளியிடப்பட்டது.

3. திவ்வியப் பிரபந்தம் மற்றைய நூல்களைப் போலல்லாமல் தமிழ் வேதமாகக் குலாவப் படுதலால் புதிய பாடங்களை மனம்போனபடி புகுத்தாமல் பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களுக் கிணங்கிய பழைய பாடம் ஆதரிக்கப் பட்டிருக்கின்றதாவென்று ஆராய்வதே என்போல்வாருடைய பணியாகும். மேலே குறித்த மயிலை மாதவ தாஸன் முதற் பதிப்பில் 743, 744ஆம் பக்கங்களில் துணை நூல் அட்டவணை வெளியிடப்பட்டதில் "ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார்......வெளியிட்டுள்ள திவ்யார்த்த தீபிகை"........"ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் வெளியிட்ட பகவத்கதை யமுதம்".......“ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் பதிப்பு ஸ்ரீவசநபூஷண ஸாரம், நித்யாநுஸந்தானம்" ஆக இப்புத்தகங்களைத் துணைகொண்டதாக" அறிவிக்கப்பட்டுள்ளது. ஆனால், நம்முடைய திவ்யார்த்த தீபிகையில் பூருவாசாரிய வியாக்கியான விருத்தங்களென்று மறுக்கப்பட்ட சில

பாடங்களும் அப்பதிப்பில் கொள்ளப்பட்டிருந்ததைக் கண்ட யாம் "இன்னின்ன பாடங்கள் திருத்தப்பட வேண்டும்" என்று அவர்க்குத் தெரிவித்திருந்தோம். அப்போது அப்பெரியார் ஆராய்ந்து பார்த்து "ஸ்வாமிகள் தெரிவித்த திருத்தங்கள் மிகவும் அவசியமானவையே; காரியஸ்தர்களின் கவனக் குறைவினால் ஏற்பட்ட தவறு மன்னிக்கத்தக்கதே; மறு பதிப்பில் கவனிக்கச் செய்யலாகும்" என்று விடை தந்திருந்தார்.

4. இப்போதைய பதிப்பில் அப்பிழைகளெல்லாம் அருமலிருப்பதோடு புதிய பிழைகளும் புகுந்துள்ளன. அருத பழைய பிழைகளில் சில எடுத்துக்காட்டலாமென நினைத்தேன்; அநுபந்தத்தில் பல பிழைகளையுமெடுத்துக் காட்டுவேன். புதிய பிழைகள் புகுந்தது மிக வருந்தத்தக்கது. இதில் ஒன்றே காட்டுகிறேன்; திருவிருத்தம் (பா. 89) "தீவினை கட்கரு நஞ்சினை நல்வினைக் கின்னமுதை" என்பது இப்போதைய பதிப்பு. "தீவினைக் கருநஞ்சை நல்வினைக் கின்னமுதத்தினை" என்று முன்னிரண்டு பதிப்புகளிலுள்ளது. பூருவர்களின் வியாக்கியானங்களுள் ஒன்றில் இப்பாசுரத்தின் பாடத்தைப் பற்றின விசாரம் செய்யப்பட்டுள்ளது. நம்முடைய திவ்யார்த்த தீபிகை யுரையில் அதைப் பற்றி விரிவான ஆராய்ச்சி காணலாம். இப்பதிப்பில் ஸாஹஸமாகவே திருத்தம் செய்யப்பட்டு விட்டது. இங்ஙனே பல.

5. அன்பர்காள்! நாம் இவ்வாராய்ச்சிக் கட்டுரை எழுதத் தொடங்கியது முக்கியமாகப் பாடப்பிறழ்வுகளைப் பற்றியல்ல. ஸம்பிரதாய பரம்பரையிற் படிந்து ஸதாசாரியர்கள் பக்கலில் திவ்யப் பிரபந்தங்களை அதிகரிக்கப் பெறுமவர்கள் புத்தக பாடங்களினால் ஏமாற்றமடைய மாட்டார்களென்பது நமது நம்பிக்கை. முக்கியமாக இக்கட்டுரையின் விவக்ஷிதம் இனி விவரிக்கலாகிறது. மயிலை மாதவ தாஸருடைய முன்பதிப்புகளில் ஆழ்வார்கள் திவ்ய சரித்திரம் எழுதி முடித்தவுடனே "ஆழ்வார்கள் அவதரித்த காலம்" என மகுடமிட்டு எழுதி வெளியிடப்பட்டுள்ளதாவது—

"ஆழ்வார்கள் அவதரித்த காலம். திவ்ய ஸூரி சரிதத்திலும் ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்திலும் ஆழ்வார்கள் திருவவதாரம் செய்த மாதங்களும் திருநக்ஷத்ரங்களுமே உள்ளன; யுகம் வருஷம் திதி வாரம் முதலியன காணப்படவில்லை. நம்மாழ்வார் திருவவதாரத்துக்கு மட்டும் லக்னம் உட்பட எல்லாம் ஆறாயிரப்படியில் தரப்பட்டுள்ளன. திருமங்கையாழ்வார் அவதார வருஷத்தின் பெயர் மட்டும் காணப்படுகிறது. 'மூவாயிரப்படி குருபரம்பரையில் கீழ்வருமாறுள்ளது:—பொய்கையாழ்வார் துவாபரயுகம் 862901 (=B. C. 4202 கி. மு.) சித்தார்த்தி௵ ஐப்பசி௴ சுக்லாஷ்டமி செவ்வாய்க்கிழமை திருவோணம்; பூதத்தாழ்வார் ஷை யுகம் ஷை௵ ஷை௴ சுக்லநவமி புதன்கிழமை அவிட்டம்; பேயாழ்வார் ஷை யுகம் ஷை௵ ஷை௴ சுக்லதசமி வியாழக்கிழமை சதயம்; திருமழிசைப்பிரான் ஷை யுகம் ஷை௵ தை௴ கிருஷ்ண பிரதமை ஞாயிற்றுக்கிழமை மகம்; மதுரகவிகள் ஷை யுகம் 863879 (B. C. 3224) ஈசுவர௵ சித்திரை௴ சுக்ல சதுர்த்தி வெள்ளிக்கிழமை சித்திரை நக்ஷத்ரம்; நம்மாழ்வார் கலிபிறந்த 43-வது நாள் (B. C. 3102) பிரமாதி௵ வைகாசி௴ பௌர்ணமி வெள்ளிக்கிழமை விசாகம்; குலசேகராழ்வார் கலி 28 (B. C. 3075) பராபவ௵ மாசி௴ சுக்ல துவாதசி வெள்ளிக்கிழமை புனர்பூசம்: பெரியாழ்வார் கலி 47 (B. C. 3056) குரோதன௵ ஆனி௴ சுக்ல ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை சுவாதி; ஆண்டாள் கலி 98 (B. C. 3005) நள௵ ஆடி௴ சுக்ல சதுர்த்தி செவ்வாய்க்கிழமை பூரம்; தொண்டரடிப்பொடியாழ்வார் கலி 289 (B. C. 2814) பிரபவ௵ மார்கழி௴

கிருஷ்ண சதுர்த்தசி செவ்வாய்க்கிழமை கேட்டை; திருப்பாணாழ்வார் கலி 343 (B. C. 2760) துர்மதி௵ கார்த்திகைமீ கிருஷ்ணதுவிதியை புதன்கிழமை ரோஹிணி; திருமங்கையாழ்வார் கலி 398 (B. C. 2714) நள௵ கார்த்திகைமீ பௌர்ணமி வியாழக்கிழமை கிருத்திகை நக்ஷத்ரம். ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்தின் பழைய சரித்திரத்தைக் கூறும் "கோயிலொழுகு" என்ற நூலில் குலசேகரப் பெருமாள் கல்யப்தம் ஐம்பது வருஷத்துக்கு மேல் சேர சோழ பாண்டிய மண்டலங்களுக்குப் பிரபுவாய்த் தமது புத்ரி சோழவல்லியை அழகிய மணவாளப் பெருமாளுக்குத் திருமணம் செய்வித்துத் தமது சொத்தை ஸ்ரீதனமாகக் கொடுத்து மூன்றும் ஆவரணத்தின் தென்மேற்கில் சேனைவென்றான் திருமண்டபம் கட்டிய செய்தியும், கல்யப்தம் 105-க்கு மேல் ஸ்ரீவில்லிபுத்தூரிலே அழகிய மணவாளன் ரங்கமன்னாராக எழுந்தருளிச் சூடிக்கொடுத்த நாச்சியாரைத் திருமணம் புணர்ந்த செய்தியும், கல்யப்தம் 445-க்குமேல் ஆழ்வார் திருமங்கையாழ்வார் தினம் திருவரங்கம் திருப்பதியிலே நித்யவாசம் பண்ணிக்கொண்டு திருப்பணிகள் நடத்திய செய்தியும் கூறப்பட்டுள்ளன. பெரியாழ்வார் திருமொழியில் (344-ம் பாசுரத்தில்) கோநெடுமாறன் பற்றியும், திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (1128—1137) சில பல்லவ மன்னர் பற்றியும், (1498—1507) கோச்செங்கட் சோழன் பற்றியும் வரும் குறிப்புக்கள், சிலாசாஸனங்கள், செய்யுள் நடை, இலக்கண விசேடங்கள் முதலிய பல ஆதாரங்களைக் கொண்டு ஸ்ரீமான்கள் டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், பி. டி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், டி. ஏ. கோபிநாத ராவ், ராவ்சாஹேப் மு. ராகவையங்கார் முதலிய ஆராய்ச்சி நிபுணர்கள் ஆழ்வார்கள் காலம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுக்குட்பட்ட ஐந்நூறு வருஷங்கள் (5th to 10th Century A. D.) என்கின்றனர். சம்ப்ரதாய ஞானமும் சரித்ர ஞானமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற" ஸ்ரீவைஷ்ணவப் பேரறிஞர்களுடைய ஆராய்ச்சிக்குரிய முதற்பொருளாக இஃதுள்ளது.

6. இக்கட்டுரை மிகவும் அழகியதே; ஆனால் இவ்வளவோடு நில்லாமல் "டாக்டர் மா. இராசமாணிக்கனார்" பெயரால் "ஆழ்வார்கள்காலம்" என்னுங்கட்டுரை 18 பக்கங்கொண்டதாக வெளியிடப்பட்டுள்ளது. இது முற்றிலும் இருளும் மருளும் வடிவெடுத்தவர்கள் சிலர் எழுதியிருந்தவையும் ஏற்கெனவே [பலவாண்டுகட்கு முன்னமே] நம்மால் மறுத்தொழிக்கப் பட்டவையுமான கட்டுரைகளைப் பின்பற்றி எழுதப்பட்டதென்பதை விவேகிகள் உய்த்துணரவேணும். நம்முடைய அந்தப் பழைய மறுப்பு வியாஸத்தை இதில்மேலே வெளியிடுவோம்; அதன்பிறகு புதிய மறுப்புரையும் தருவோம். ... *

## — இரண்டாம் அதிகாரம் —

### காலஞ்சென்ற மு. இராகவையங்காருடைய மருள்விளக்கம்.

7. மேலே குறித்த 'இராசமாணிக்கனார்' தமது கட்டுரையில், காலஞ்சென்ற மு. இராகவய்யங்காரவர்களின் 'ஆழ்வார்கள் காலநிலை' என்னும் புத்தகத்தை அடிக்கடி உதாஹரிக்கின்றார். அந்த ராகவையங்கார் ஜீவித்திருந்த காலத்திலேயே அவருடைய கட்டுரைகளெல்லாம் பெரும்பாலும் மதிமயக்கத்தினாலானவை யென்பதை நாம் விரிவுக்கு அஞ்சாமல் மூதலித்து 'செந்தமிழாராய்ச்சி' முதலான நூல்களை வெளியிட்டிருக்கிறோம். ஈண்டு மேலே காட்டுவதாகக் குறித்த மறுப்பு வியாஸமும் அவருடைய ஜீவிதகாலத்திலேயே வெளியிடப்

